# ஆர்யதர்மம்

புத்தகம் 5, ஸஞ்சிகை 7

ஸித்தார்த்த, கார்த்திகை

*[November / December 1919]*

Record no. 287

# *Āryatarmam*

*Puttakam 5, sañcikai 7*

*Sittārtta, Kārttikai*

*[November / December 1919]*

Record no. 287




" வாழ்க வந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே. "
—(தேவாரம்.)

ஸித்தார்த்தஸூ கார்த்திகைமீ

# வேதங்கள் நித்யங்களே.

(முன்தொடர்ச்சி)



இனி நமது சிரோமணியால் ருக்குவேதத்திற்குப் பிறகு தான் ஸாமவேதம் உண்டாயிருக்கவேணுமென்பதற்கு பிரமாணமாக எடுத்துச் சொல்லப்பட்ட 'ஐவ(ு)யு)-டூஸு ஸாஉமாயதி' என்ற விதியைச் சிறிது விடுப்போம். இந்த விதிக்கு ருக்கை ஆதாரமாக வைத்துக்கொண்டு அதில்

ஸாமகானத்தை செய்யவேணுமென்பது தான் நேருன அர்த்தம் என்பதில் ஸந்தேகமில்லை. இதனுல் ரிக்வேதமே முந்தி ஏற்பட்டு இருக்கவேணுமென்ற குயுக்தி நிறைவேருது. ஏனென்ருல் இங்கு விதியில் 'ஐவி' யென்று காணப்படுகிறபடியால் அதற்கு ரிக்கென்றே அர்த்தம் சொல்லவேணும். லக்ஷணையயங்கீகரித்தாவது ஐவி என்கிற பதத்திற்கு ரிக்வேதமென்று அர்த்தம் சொல்லுவதற்கு யாதொரு பிரமாணம் கிடையாதானபடியால் கீழ்ச் சொன்ன அர்த்தம் ஸித்திக்காது. யஜுர்வேதத்திலும் பற்பல ரிக்குக்கள் காண்கிறபடியால் நமது சிரோமணியால் கூறப்பட்ட பிரமாணத்தாலேயே யஜுர்வேதமே முந்தி ஏற்பட்டு இருக்கவேணுமென்று நாம் சொல்வோம். தவிர ஸாமவேதத்திலும் யஜுஸ்ஸான ஸோதாபாக்ஷரங்கள் அநேகங்கள் இருக்கிறபடியால் யஜுர்வேதத்திற்குப் பிறகுதான் ஸாமவேதம் உண்டாயிருக்கவேணுமென்றும் சொல்லலாம். ஆகையால் அந்தந்த வேதங்களில் அந்தந்த மந்திரங்களே இருக்கவேணுமென்று நியமமில்லாத்தாலும் எல்லா வேதங்களிலும் எல்லா மந்திரங்களுமிருக்கிறபடியாலும் யுக்தியாபாஸத்தைக்கொண்டு குறிப்பிட்டு எந்த வேதத்திற்கும் காலத்தை நிர்ணயிக்கமுடியாதென்பது திண்ணம். தவிர அத்வர்யுசாகையான இந்த யஜுர்வேதமானது 'அத்வர்யு' என்கிற ருத்விக்கால் செய்யவேண்டிய பிரயோகங்களேயும், அக்னிஹோத்திரம் முதலான கிரியாஸ்வரூபத்தையும் வரிசையாக சொல்லுகிறபடியால் எல்லா வேதத்தைக் காட்டிலும் இவ்வேதமே பிரதானம் பிரபலம் என்பது வைதிகர்களில் யாருக்குமாக்ஷேபமில்லை. ஆகையால் தான் இவ் வேதத்தில் விதித்த பிரயோகத்தைச் செய்கிற 'அத்வர்யு' என்கிற ருத்விக்கை மற்றருத்விக்குகளைக்காட்டிலும் பிரதானமென்று 'அத்வர்யுவர்வா ருத்விஜாம் ப்ரதமோ யுஜ்யதே' என்று நமது சுருதிசொல்லுகிறது. ஆகையால் தான் இந்த வேதத்திற்கும் மற்ற வேதங்களுக்கும் கிரியாஸ்வரூபவிஷயமாக ஏதாவது விரோதம் ஏற்பட்டால் 'அத்வர்யு' சாகையான யஜுஸ்ஸுக்கே பிரதான்யத்தை சொல்லி அதில் சொன்னபடியே கிரியைகளை அனுஷ்டிக்க வேண்டுமென்று ஆபஸ்தம்பர் முதலான கல்பஸூத்திரக்காரர்கள் நிர்ணயித்துவிட்டார்கள் இங்கு நம் சிரோமணி அபிப்பிராய பிரகாரம் ரிக்வேதகாலத்தில் யஜுர்வேதம் உண்டாகவில்லையென்று சொன்னுல், அக்காலத்தில் செய்யப்படும் யக்ஞங்களை நமது முன்னோர்கள் எப்படிச் செய்து வந்தார்கள். அக்காலத்தில் 'அத்வர்யு' என்கிற ரித்விக்கே கிடையாதா? பிரதானமான ரித்விக்கு இல்லாமல் ஒரு யக்ஞமுண்டா? இவ்விதமான மஹத்தான ஆக்ஷேபத்திற்கு வர்ஷசதமானுலும் பிரமாணமூலமான ஸமாதானம் கிடையாதானபடியால் எல்லா வேதமும் அநாதியென்றே ஏற்பட தடையில்லை. இங்கு வேறு சிலர் மந்திரம், பிராம்மணம் என்று வேதத்திலுள்ள பிரிவில், மந்திரபாகமானது சிறிது பழமையானுலும், பிராம்மணம் என்ற பாகமானது அதின் நடையை சோதித்து பார்க்கும்போது வெகு ஸமீபகாலத்தில் தான் எழுதப்பட்டு இருக்கவேணுமென்று நிச்சயித்து விட்டார்கள். இதுவும் பிரமாணங்களுக்கு உள்படாமல் தாமாக செய்துகொண்ட குயுக்தியின் பலமென்று சொல்ல தடையில்லை. பாஷையின் நடையைக் கொண்டு காலத்தை நிர்ணயிப்பது கூடாதென்று சொன்னேம். தவிரவும் உலகத்தில் மூலக்ரந்தத்தில் சிலது கடினமாகவும் உரை சிறிது எளிதாகவும் ஏற்படுவதை யாவருமறிந்த விஷயமே. அதுபோல் சிறிது கடினமான மந்திரபாகத்தை வேதமே தாம் எளிய நடையில் வியாக்கியானம் செய்து கொடுக்க ஆரம்பித்த

படியால் இரண்டு பாகத்திலும் நடையில் பேதமிருப்பது ஸஹஜமானதே. மந்திரபாகமனைத்தும் கடினமாகவும், பிராமணபாகம் முழுதும் எளியதாயுமிருக்குமென்கிற நியமமுமில்லை. 'யத்ராஸெள ஜ்ஹாஸெளெளா சுவஹ' இத்யாதிகள் போன்ற பெரும்பாலான மந்திரபாகம் எளிய நடையிலும் அநேகவிடங்களில் பிராமணபாகமானது வெகு கடினமான நடையிலும் அமைந்திருப்பதால் நடையினுடைய தாரதம்யத்தை நிர்ணயித்துச் சொல்ல முடியாது. மேலும் பிரும்மணபாகம் எழுதப்பட்டதாயிருந்தால், அதை யெழுதினவர் யார் அவர் பெயரென்ன? எதற்காக எழுதினர்? இதுபோன்ற ஆக்ஷேபணைக்குத் தகுந்த பிரமாணமூலமான ஸமாதானம் கிடையாதானபடியால் மந்திரபாகத்தை போல் பிராம்மணபாகமும் அநாதியென்பதில் சிறிதும் சந்தேகமில்லை. இவ்விஷயத்தைத் தான் காத்தியாயனமகர்ஷியானவர், 'மந்த்ரப்ராஹ்மணயோ வேதநாமதேயம்' என்கிற ஸூத்திரத்தால் இரண்டுபாகத்திற்கும் வேதமென்ற பெயருண்டென்று விளக்கி காட்டினர். ஆபஸ்தம்பர் முதலிய மற்றெல்லா மகர்ஷிகளும் இவ்விஷயத்தில் ஒரேமாதிரியாகத்தான் அபிப்பிராயப்பட்டிருக்கிறார்கள். மனுவும் 'வேதோऽகிலோ தர்மமூலம்' என்று கூறியுள்ளார். இங்கு சொல்லுகிற 'அகில' என்கிற பதமானது எல்லாம் என்கிற அர்த்தத்தில் பிரயோகப்பட்டு இருப்பதால் மந்திரம் பிராம்மணம் முதலிய பாகமுள்ள வேதமே உலகிலுள்ள தர்மங்களுக்கு மூலமாயுள்ளது என்கிற அர்த்தமானது வெகு சுலபமாக பிரகாசிக்கிறது. நம் நாகரீக மேதாவிகள் சொல்லும் பிரகாரம் மந்திரபாகம் மட்டும் வேதமென்றும் அது சிறிது அநாதியாயிருக்கலாமென்றும் சொல்லப்பட்டால் இங்கு 'அகில' என்கிற பதப்பிரயோகம் பிரயோஜனமற்றுப் போகும். அனேக



பாகமுள்ளயிடத்திலல்லவோ எல்லாம் என்கிற பதம் பிரயோகிக்கப்படுவது வழக்கம். ஆகையால் மனுவின் அபிப்பிராயப்படியும் பிராம்மணபாகம் அநாதியான வேதமென்றே ஏற்படுகிறது. தவிர ஜைமினி மகர்ஷியும் வேதத்திலுள்ள அர்த்தவாதம், மந்திரம், முதலிய பிரிவுகளுக்கு இலக்ஷணங்களை சொல்லிவிட்டு மிகுந்தபாகத்திற்கு பிராம்மணம் என்று பெயரென்று 'சேஷே ப்ராஹ்மணசப்த:' என்கிற ஸூத்திரத்தில் நிர்ணயித்து பிராம்மணபாகமும் வேதமென்பதை ஒப்புக்கொண்டார். தவிர இந்த பிராம்மணபாகத்தில்தான் ஸிருஷ்டி முதலியவைகள் விஸ்தாரமாக கூறப்பட்டு இருக்கின்றன. இந்த பிராம்மணபாகம் பின்னிட்டு ஏற்பட்டு யிருந்தால் பிரம்மா வேதங்களை ஆதாரமாகக் கொண்டு உலகஸிருஷ்டியை செய்தாரென்று 'வேதசப்தேப்ய ஏவாதௌ ப்ருதக் ஸம்ஸ்தாஶ்ச நிர்மமே' என்பதால் கூறுகிற மனுதர்மசாஸ்திரத்திற்கு விரோதம் வருவதை கவனிக்கவேண்டும் மற்றொருயிடத்தில் ஜைமினி மகர்ஷியும் மந்திரபாகங்களை எப்படியானல் குரு முகமாக ஸகல நியமங்களுடன் க்ரஹித்து வருகிறோமோ அப்படி பிரும்மணபாகத்தையும் க்ரஹித்து வருகிறபடியால் மந்திரபாகம்போல் பிரும்மணபாகமும் வேதந்தானென்பதை 'துல்யம் ச ஸாம்ப்ரதாயிகம்' என்கிற ஸூத்திரத்தில் விளக்கினர். ஆகையால் வேதத்திலுள்ள பிரிவுகளெல்லாம் அநாதியென்று ஏற்பட்டதுடன் புருஷஸூக்தம் முதலிய சில பாகங்கள் புதிதாய் எழுதப்பட்டு சேர்க்கப்பட்டதென்கிற குயுக்திகளும் பதில் சொல்லப்பட்டன. இவ்விஷயங்களனைத்தையும் மனதில் வைத்துக்கொண்டுதான் 'யா வேதபாஹ்யா: ஸ்ம்ருதயோ யாஶ்ச காஶ்ச குத்ருஷ்டய: ஸர்வாஸ்தா நிஷ்பலா: ப்ரேத்ய தமோநிஷ்டா ஹி தா: ஸ்ம்ருதா: ||' என்பதால் மனு ஸ்பஷ்டமாகச் சொன்னர். இங்கு யுகாந்

தரங்களில் மறைந்திருந்த வேதங்களை ரிஷிகள் தபோமஹிமையால் அடைந்து வெளியிட்டார்கள் என்று ஸ்பஷ்டமாக சொல்லுகிறபடியால் வேதங்களைத்துமோ அல்லது சிலபாகமோ ஒரு காலவிசேஷத்தில் உண்டானதென்று சொல்லப் புறப்படுவது விவேகமற்ற காரியமென்றே சொல்லவேணும். நமது நாகரீகம் வாய்ந்த ஹிந்துமதமானது பிரமாணத்தையே முக்கியமாய் கொண்டு ஏற்பட்டது. அத்தகைய பிரமாணமும் வேதத்தை தவிர வேறு கௌரவம் வாய்ந்தது ஒன்றுமில்லை. இவ்வாறு பெரிய தேசத்தின் திவ்ய நாகரீகங்களுக்கும் மதரஹஸ்யங்களுக்கும் அழுத்தமான வேர் போன்ற மகா மஹிமையுள்ள வேதங்களை பிற நாட்டாருடைய நிர்மூலசரித்திரக்கட்டுக் கதைகளை ஆதாரமாகக் கொண்டு சிறுமைப்படுத்துவதற்கு உண்மையான ஹிந்து எவனும் முற்படமாட்டான். உலகத்தில் அநாகரீகங்களான பல மதங்களிலிருந்தும் அவையவை தம் தம் பழமையும் நாகரீகத்தையும் மிகைப்படுத்தி கௌரவப்படுத்திக்கொண்டு வரும்போது அவைகளின் கண்முன் நம்மவர்கள் மூலமற்ற கதைகளை நம்பி நம் மதத்தையே தாழ்த்திப் பேசுவதை விட வேறு த்ரோஹமான காரியம் ஒன்றிருப்பதாக நாம் நினைக்கவில்லை. அதிலும் நமது சிரோமணிதான் கற்ற நவீனமாதிரியான விமர்சத்திற்கு முதல் முதல் நமது வேதத்தை இறையாகக் கொண்டதை நாம் மிகவும் வருத்தத்துடன் குறிப்பிடுகிறோம். இத்தகைய துர்வாதங்களை விட்டு நல்வழியில் அவரது விமர்சன பாண்டியத்யத்தைச் செலவிடுவாரென்று நம்புகிறோம்.

இவருடைய வியாஸத்திற்கு சரித்திரமூலமான ஆக்ஷேபங்களை அடுத்த சஞ்சிகையில் வெளியிடுவோம்.

அக்நிஹோத்ரம் தாததேசிகதாதாசாரியார்.

மீமாம்ஸகர்



குறிப்பு:-ப்ரம்ஹஸ்ரீ அக்நிஹோத்ரம் தாததேசிகதாதாசாரியார் அவர்களுடைய வியாஸத்தை முற்றிலும் நாம் அங்கீகரிக்கிறோம். பூர்வபக்ஷம் ஒன்று ஏற்படாவிட்டால் ஸித்தாந்தம் ஏற்படக்காரணமிராது. நியாயசிரோமணி ஸ்ரீமான் ஸ்ரீனிவாஸசாஸ்திரியார் அவர்களுடைய பூர்வபக்ஷவியாஸம் ஒன்று ஏற்பட்டதனால் இந்த ஸித்தாந்தம் வெளிப்படலாயிற்று. கரகமலாமலகம்போல் ஸகலத்தையும் பிரத்தியக்ஷமாயறிந்த ஸ்ரீ சங்கராச்சாரியார், ஸ்ரீ ராமானுஜாச்சாரியார், ஸ்ரீமத்வாசாரியார் முதலான அவதாரபுருஷர்களுடைய பிரமாணங்களை விட்டு பாஸ்சாத்ய நவீனர்களான வித்வான்களுடைய அசாஸ்திரீயமான அபிப்பிராயத்தை நாம் அங்கீகரிக்கவில்லை. தக்காலம் இங்கிலீஷ் பள்ளிக்கூடங்களில் இந்த அசாஸ்திரீயமான அபிப்பிராயங்கள் கற்பிக்கப்படுவது ஒருபுறமிருக்க ஸம்ஸ்கிருதகாலேஜ் என்று பெயர்வைத்தும் சிரோமணிவித்வான் பரீக்ஷைகளுக்கு மாணுக்கர்களை தயார் செய்துவரும் தர்மபள்ளிக்கூடங்களில் கூட இவ்விதமான ஆபாஸயுக்திகளும் அவைதிகமானதும் அசாஸ்திரீயமான பாஸ்சாத்ய அபிப்பிராயங்கள் வெகு முயற்சியோடு கற்பிக்கப்பட்டு வருகிறதென்று வெளியாகிறது.

பத்திராதிபர்.





## மைமின்ஸிங் ஹிந்து ஹிதஸாதினி ஸமிதியில்,

# ஸ்ரீ தர்பங்கா மஹாராஜா அவர்களின் பிரஸங்கம்.

(முன்தொடர்ச்சி)



இவ்விதமாக பலருக்குத் தொழிற் பயிற்சியும், சிலருக்கு சாஸ்திர காவ்யபயிற்சியும் செய்விப்பதில், அச்சிறுவர்களுக்கு ஹிந்துமத உண்மைப் பற்றும் அதன் உந்நத கொள்கைகளும் அவர்கள் மனதில் புத்தி பூர்வமாய் பதியவும் நாம் முக்ய கவலை கொள்ளவேண்டும். ஏனென்றால் அப்படி அவர்கள் அறியாமலும் ஹிருதயத்தில் பதியாமலும் நாம் அநாதரவு செய்துவருவதே, நம் சிறுவர்களுக்கு உண்மையான மதாபிமானம் நசித்துவருவதற்கு முக்யகாரணமாயிருக்கிறது. இக்கார்யம் கைகூடும் வண்ணம், தற்காலம் ஆங்கிலதேசப் பள்ளிக்கூடங்களில் நடந்துவருவது போலவும் நம் சிறுவர்கள் அனைவரும் நம் முன்னோர்கள் காலத்தில் நடந்தேறியதுபோலவே, தங்கள் உபாத்தியாயர்களுடன் கூடவே மடங்களிலும், சத்ரவாஸங்களிலும் வாசஞ்செய்துவரவேண்டும். அந்த குருகுல வாஸத்தினுலே தான், தாங்கள் அறிந்து அநுஷ்டித்தவண்ணம் உண்மையான மதாபிமானக்கிளர்ச்சியை தங்கள் சிஷ்



யர்களுக்கு போதிக்கவும், அவர்கள் ஹிந்துமத ஒழுக்கம் அநுஷ்டானம் தவறாது நடக்கிறார்களா என்று மேல்பார்க்கவும் சாத்யமாகும்.

கீழ் சொன்ன வழி என்ன இன்னும் இவைபோன்ற மற்ற சாதனங்கள் என்ன இவைகளால், பிராமணன் தனது பிராசீனமான, தொழில்கள் ஆசாரம், மனோபாவங்களுக்குத் திரும்பவேண்டும். அப்படித் திரும்பினால் தான் அவன் எல்லாருக்கும் மேன்மையான தனது பூர்வ அந்தஸ்தையும், அரசனுக்கும் குருவும் மந்திரியுமான ஸ்தானத்தையும் மீண்டும் அடையக்கூடும். பழைய ஸ்தானத்தையடைய அவன், முயலவே வேண்டும். அது தன் பொருட்டு பெரும்பொருள் படைத்து சுகத்தை அநுபவிப்பதற்காக அல்ல. அப்படி எண்ணங்கொண்டால் உத்தேசித்த காரியத்துக்கு அவன் தகுதியாகமாட்டான். பின்னை எதற்கென்றால், பிராமணன் தன் பூர்வ உந்நத ஸ்திதிக்கு மீண்டும் செல்வதனால் தான், இந்த ஹிந்துஜாதியாரே எத்திசையும் பயமுறுத்தி நெருக்கி வரும் அதோகதியான நாசத்தினின்றும் காப்பாற்றப்படுவார்கள். அவன் அப்படி செய்யாமற்போனால் அந்த நாசம் நமக்கு வந்தே தீரும் தவிர்க்கமுடியாது. ஏனென்றால் நான் ஏற்கனவே சொல்லிய பிரகாரம், தனது ஆத்மஜ்ஞானமும், அதற்கான மனோபாவமும் கைவிட்டு ஹிந்துஜாதியானது கணப்பொழுது ஜீவித்திராது. மேல்சொன்ன ஆத்மஜ்ஞானக்கொள்கைகளும் மனோபாவங்களும், அதற்கென்று பிறந்து படிப்பிக்கப்பட்ட பிராமணர்கள் என்று ஒரு விசேஷவகுப்பாரால் சாஸ்திரபூர்வகமாயும் புத்திபூர்வகமாயும் ரக்ஷிக்கப்பட்டு போதிக்கப்பட்டாலொழிய, நிலைக்கமாட்டா.

நான் இப்பிரஸங்கத்தை முடிக்குமுன்னர், இன்று

சபையில் நீங்கள் கைக்கொள்ளப்போகிற தீர்மானத்தைப் பற்றி சில வார்த்தைகள் சொல்வேன். பல நூற்றூண்டுகளாக ஹிந்துமதமானது அயலார் செய்த அளவற்ற இடையூறுகளை அநுபவித்துக் கஷ்டப்பட்டதைக்காட்டிலும், நம்மை அடியோடே தொலைத்துவிடக்கூடியதான மகத்தான ஆபத்துக்கு அது உள்ளாகியிருக்கிறது என்பதை நாம் அறியாது கண்மூடப்போகாது. நம்மை விழுங்க வாய் திறந்திருக்கும் ஆபத்தை வராமல் தடுக்க சமயத்தில் முயலாமலும், நாம் நம்முள் பல ஜாதியாரும் ஒற்றுமையாய்ச் சேர்ந்து படை திரட்டவேண்டியிருக்க, பலனற்ற உள் வேற்றுமைகள் நம்மை ஆட்கொள்ளப்போனாலும் நாம் நமது முன்னோர்கள் பின்வழி சந்ததியார்கள் என்று சொல்லப்பொருந்தாது. ஐக்யமே பலம். ஹிந்துஜாதியின் எல்லா வகுப்பாரும் நமது ஆத்மோந்நதிக்கான நாகரீகத்தை ஒட்டையின்றி நடைபெறச்செய்யவும், பாஶ்சாத்ய சார்வாக மதமானது நமது நிச்ரேயஸூக்கு சாதனமான ஆஸ்தியை தொலைக்காதவண்ணம் காக்கவும் ஏகமனோபாவக்கிளர்ச்சியை யுடையவர்களாகவேண்டும். ஒரு வகுப்பாருக்கும் மற்றோர் வகுப்பாருக்கும், ஒரு வகுப்பிலேயே ஒரு சாராருக்கும் மற்றோர் சாராருக்கும், சகோதரருக்கும் சகோதரருக்குமே, ஏதோ சில காலங்களில் சில வித்யாஸமான மனோபாவங்கள் உண்டாகிறது சஹஜமே. ஆனால் அவைகளை எல்லாம் லௌகிக சாமர்த்யத்தாலும், பொறுமையாலும், எல்லாம் அறியும் ஈசுவரனிடத்தில் திடநம்பிக்கையாலும் நாம் அவைகளைத் தீர்க்கக் கூடும் என்பதில் தடையில்லை.

ஒன்றுபடக்கூடாது என்று ஆரம்பத்தில் தோன்றும் வித்யாஸங்கள் கூட சூரியன் ஆகாசத்தில் ப்ரகாசிக்கும் திண்மைபோல், எல்லா வகுப்பாரும் சுயலாபத்தைக் கருதாது ஒருமனதாய் நேசத்தையும் அந்யோந்யபாவத்தையும் உண்டுபண்ண எத்தனப்பட்டால் பறந்துபோம். தற்காலம் பிராமணர்களையும் அவர்கள் தர்மத்தையும் பலவிதமாய் எதிர்த்துத் தாக்குவது ஹிந்துமதத்தின் அதிபலமான அரணைத் தகர்ப்பதற்கும், அந்தரங்கமான கடைசி நோக்கமானது, அதுமூலமாய் எப்படி, யவன, ரோமக, அஸ்ஸிரிய, மிச்ர, பாரஸீக, பாபிலோனிய நாகரீகங்களை தொலைத்தனவோ, அவ்விதமே ஹிந்து நாகரீகத்தையும் அடியோடே தொலைத்துவிடுவதற்குமான ஒரு ஏற்பாடாகும். ஆகையால், தற்காலநிலைமையில், நாம் நமக்குள்ள சில்லரை எண்ணங்களை விட்டு, தோளுக்குத் தோள் சேர்ந்துநின்று எதிர்க்கவேண்டியது அத்யாவசியமாகும். யுகந்தோறும், கல்பந்தோறும், ஆயிரக்கணக்கான நூற்றூண்டுகளாக நிலைத்துவந்திருக்கிறதும், நமது ரிஷிகளால் உத்க்ருஷ்டமாய் அநுஷ்டிக்கப்பட்டு வந்திருக்கிறதுமான நமது மதத்தை ரக்ஷித்து வளர்த்துவர எவ்வித காரியமும் நாம் செய்துவரவேணுமாய், நமது பிராசீன மனோபாவங்களைக் கைப்பற்ற நமது ஜனங்களைப் படிப்பிக்கவேண்டும்.



நமக்கு வழிகாட்டி ஈடேற்ற கனவான்களே, நாம் தக்கமுறையோடும், பணிவோடும், பக்தியோடும் சர்வேசுவரியான நித்யமாதாவின் பாதங்களை சரணமடைந்து பிரார்த்திப்போமாக. அவருடைய ப்ரஸாதத்தினால், தற்போதுள்ள ஆபத்தும், இனி வருங்காலத்தில் ஒருக்கால் நேரக்கூடியதும் நீங்கி, சநாதநதர்மத்தின் கொடியை உந்நதமாய் நாம் தூக்கிச்செல்ல சக்தியைத் தந்து, நம்மை நல்வழியில் நடத்துவதில் நம் தாயைத் தவிர்த்து நமக்கு யார் துணை. அவரையே நாம் பணிந்து வாழ்த்துவோமாக.

சுபம்.



# பத்ராதிபர் குறிப்புகள்.

## தர்மப்ரசார வர்த்தமானம்.

1. திருவாங்கூர் மகாராஜா அவர்கள் நல்வரவு:—

30-11-1919ல் அனந்தசயநம் மஹாராஜா அவர்கள் இந்நகரில் தங்கினுர்கள். நித்ய தர்மரக்ஷகரான மகாராஜா அவர்கள் நமது மஹாமண்டலத்தின் பிரதான சம்ரக்ஷகர்களாக இருக்கிறுர்கள். பாரததர்ம திலகர் என்ற கௌரவம் மஹாமண்டலத்தார் மஹாராஜாவுக்கு அளித்திருக்கிறுர்கள். தக்ஷிண பாரத தர்மமண்டலத்தார் மஹாராஜாவுக்கு தகுந்த மரியாதை செய்வது தங்கள் கடமையாதலின், ஸ்ரீமான் நங்கவரம் சுப்பராமய்யர் அவர்கள், குழுமணி ரகுநாதசாமி அய்யர் அவர்கள், ராவ் சாகிப் ரெங்கசாமி அய்யர் அவர்கள், பண்டித சீனிவாஸாச்சாரியார் அவர்கள், பண்டித மஹாதேவசாஸ்திரிகள், பண்டித பத்மநாபசாஸ்திரிகள் அவர்கள், வித்யாவிநோத ராமஸ்வாமி சர்மா அவர்கள், டாக்டர் ஸ்வாமியாபிள்ளை, ஸ்ரீரங்கம் பாலசுப்ரமணிய அய்யர் அவர்கள் முதலானவர்கள் கார்யதர்சி சாமிநாதய்யரோடு, வேதகோஷத்துடனும் பூர்ண கும்பத்துடனும் மஹாராஜா அவர்களை தரிசனம் செய்து ஹாரம் மங்களாக்ஷதை சமர்ப்பித்து பாரத தர்மமண்டலத்தின் நோக்கங்களையும், கைங்கரியத்தையும், அதன் பிராந்திய சபையான நமது தக்ஷிண பாரத தர்மமண்டலத்தின், பற்பல விபாக தர்ம கைங்கர்யத்தையும் சமீபத்தில் நடத்துவதாக உத்தேசித்திருக்கும் 'மஹாதிவேசந' த்திருவிழாவைப்பற்றியும், சம்க்ஷேபமாய் கார்யதர்சியவர்கள் விஜ்ஞாபித்து, வந்தனோபசாரங்கள் செய்தவுடன், மஹாராஜா அவர்கள் தர்மமண்டல விஷயமாயும் மஹாதிவே



சன விஷயமாயும் குசலப்பிரசினம் செய்து, மிகவும் சந்தோஷத்துடன் வரவேற்ற பிறகு சபையார் விடைபெற்றுத் திரும்பினர். மகாராஜா அவர்கள் நமது சபையை நன்று ஆதரிப்பார்களாக.

2. ஸ்ரீ சநாதன தர்ம ரக்ஷண சபை, கண் கோத்தவனிதம்:—

இந்த சபையின் 3-வருஷத்திய உத்ஸவம் விடயபுரத்தில் 30-11-19ல் மகா-ா-ா-ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி நாயுடுகாரு அவர்கள் ஆதரவினுல் நடைபெற்றது. அப்போது வித்யாநிதிபண்டித கிருஷ்ணமாச்சாரியர் அவர்கள் அக்ராசநம் வகித்தார்கள். தர்ம விஷயங்கள் பல வித்வான்களால் உபந்யாசம் செய்யப்பட்டன. இந்த சபை கார்யதர்சிகளான விஜயராகவாச்சாரியரும், வெங்கட்டராமய்யர் அவர்களும், இந்த ஊர் மஹாஜனங்களும் வெகு சிரத்தையுடன் தர்மவிசாரம் செய்துவருவதை நாம் நிரம்பக் கொண்டாடுகிறோம். இதேமாதிரி பிரதிகிராமத்திலும் தர்மசபை ஏற்பட்டு நடத்துவது சுலபசாத்தியமாகும்.

3. சித்புரி வேதசாஸ்திர பாடசாலை:—இந்தப பாடசாலையானது சென்ற நந்தன ஹு த்தில் வி. வி. கிருஷ்ணய்யர் அவர்களால் ஸ்தாபிக்கப்பட்டு 27-வருஷங்களாக நன்றாய் நடைபெற்று வருகிறது. சென்ற காளயுக்தி ஹு-த்திய ரிப்போர்ட்டும், இவ்வருஷத்திய விசேஷ வர்த்தமானக் குறிப்பும் நாம் பெற்று மிகவும் சந்தோஷிக்கிறோம். ஐப்பசி-மீ 10-உயில காளயுக்தி-ஹு த்தில் பரீக்ஷிக்கப்பட்டு பரீட்சையில் முதன்மையாய்த் தேறின வித்யார்த்திகளுடைய உத்ஸாகத்திற்காக பாரிதோஷிகமளிக்க ஒரு மஹாசபையானது நடந்தேறியது. அப்போது ஸ்ரீ ராஜமன்னுர்குடி, மஹோபதேசக சாஸ்திரதிலக ப்ரஹ்மஸ்ரீ யஜ்ஞஸ்வாமி சாஸ்திரிகள் அவர்கள் அக்ராஸனம் வகித்தார்கள். பாலக்காடு, பெருவேம்பு முதலிய பற்பல

விடங்களிலிருந்தும் சிறந்த பண்டிதர்களும், பிரபுக்களும் வந்திருந்தார்கள். ஸ்வஸ்திவாசனமானதும் அக்ராஸனுதிபதியவர்கள் வேதத்தையும், வேதாங்கங்களையும், வைதிகர்களையும், ரக்ஷிக்கவும், அத்யயனம் செய்விக்கவேண்டிய முறைகளையும் பற்றி அருமையான ஓர் உபந்யாஸம் செய்து வித்யார்த்திகளுக்கு பாரிதோஷிகம் அளித்தார்கள். பிறகு பாடசாலைப் பிரதான அத்யக்ஷரான ப்ரம்ஹஸ்ரீ மஹோபதேசக வேதாந்த விபூஷண கிருஷ்ணசாஸ்திரிகள் அவர்கள் உபந்யாஸத்தைப் புகழ்ந்து பேசினுர்கள். இந்தப் பாடசாலையை சிருங்ககிரி ஜகத்குரு சங்கராசார்யஸ்வாமிகள் அபிமானித்து வருகிறுர்கள். அவர்களால் உத்தமனுன ஒரு வித்யார்த்திக்கு அளிக்கும்படி அநுப்பப்பட்ட ரூ. 50 (ஐம்பதை)யும் தர்க்க கக்ஷியில் முதன்மையாயிருந்து உபநிஷத் பாஷ்யம் வாசித்துவருகிற வித்யார்த்தி சங்கரநாராயணனென்பவனுக்கு பரீக்ஷாதிகாரிகளின் அநுமதியின்பேரில் அளிக்கப் பட்டது. மறுநாளும் ப்ரம்ஹஸ்ரீ யஜ்ஞஸ்வாமி சாஸ்திரிகள் அவர்கள் பாகவதம் சுருதி கீதா ப்ரஸங்கம் செய்ய எவ்லாரும் ஆநந்தித்தார்கள்.

இந்தப் பாடசாலையில் சுமார் 125 வித்யார்த்திகள் அக்ஷராப்யாஸம் முதல் கனுந்தம் அத்யயநமும், லக்ஷண கிரந்தங்களும், காவ்யம், சம்பு, நாடகம், சந்தஸ், அலங்காரம், வ்யாகரணம், தர்க்கம், வேதாந்தம் முதலிய பாடங்கள் படித்துவருகிறுர்கள். வித்யார்த்திகள் வேதமுறை வழுவாமல் சதாசாரசம்பந்நர்களாய் அத்யயனம் செய்துவருகிறுர்கள்.

இந்த வேதபாடசாலைக்கு வெகுவாய் தம் சொந்தப் பொருளை ஏராளமாய் ப்ரம்ஹஸ்ரீ வி. வி. கிருஷ்ண ஐயர் அவர்களே உதவியிருக்கிறுர்கள். அவர்களைப்போல்



உத்தம புருஷர்கள் இந்த வித்யா தர்மத்தைவிட வேறு யஜ்ஞம், தானம், தபஸு ஒன்றும் செய்யவேண்டியதில்லை. வைதிகமார்க்கம் லோபமாய்க்கொண்டுவரும் இந்தக் கலியில் இம்மஹான்களைப் போல் வேதாத்யயநத்தை சம்ரக்ஷிப்பார்கள் அவதாரபுருஷர்கள் ஆவார்கள்.

இந்தப் பாடசாலைக்கு சுமார் ரூ. 68000, க்குமேல் சாசுவத மூலதனம் இருக்கிறது. கொச்சி மஹாராஜா ஸமஸ்தானத்திலிருந்து வருஷம் ரூ. 600 உபகரிக்கப்படுகிறது. வித்யார்த்திகளுக்கு இருமாய் சாப்பாடு முதலிய சௌகரியங்கள் நன்றுய் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. காணி, வீடு நகைகளை விற்றும், பிச்சை எடுத்தும், குற்றேவல் செய்தும், இங்கிலீஷ் படித்து ஸேவகாவிர்த்தியைப் பெருமையாய்க் கொண்டாடி, பலவிதத்திலும் திண்டாடும் பிராமணர்கள், இப்போதாவது, இப்பேர்ப்பட்ட மஹான் பாடசாலைக்குத் தங்கள் பிள்ளைகளை அத்யயனத்துக்கு அநுப்பி இகபர ஸாதகங்களை அடையும்படி, நம் பிராமணர்களை பிரார்த்திக்கிறேம். சென்ற வ்ருஷத்திய மொத்தச் செலவு ரூ. 19000.

4. வர்ணுசிரம தூஷகர்கள்:—அந்நிய மதஸ்தர்கள் இப்போது நம்மைத் தூற்றுகிறதில்லை. ஹிந்துக்களிலேயே இங்கிலீஷ் படித்து பெரிய உத்யோகத்திலிருப்பவர்களே வெகு முயற்சியோடும் உத்ஸாஹத்தோடும் வர்ணுசிரமதர்மத்தை தூஷித்துவருகிறுர்கள். இந்தியாவுக்கு ஸ்வராஜ்யம் வேண்டுமென்றும், அதற்கு ஜாதியேற்பாடு விரோதமாய் நிற்கிறதென்றும், ஜாதியை அடியோடேயொழித்துவிடவேண்டுமென்றும் மனம் போன போக்கெல்லாம், ஸ்மார்த்த ஆசாரங்களையும் ப்ராமணர்களையும் நிந்தித்து வெறுக்கிறுர்கள். வர்ணுசிரமதர்மம் ஈசுவரனுல் கட்டளையிடப்பட்டு வேதப்ரமாணத்தால் கல்பங்கள்தோறும் யுகங்கள்தோறும் அநுஷ்டிக்கப்பட்டு வருகிறது. இதுவரை

யும் அதை அநுஷ்டித்ததனல் நமக்கு சிரேயஸ்கரமாயிருக்கிறதே தவிர, நாம் மற்ற தேசத்தாரைவிட அநாகரீகமாகயிருக்கவில்லை. நமது இகலோக சுகத்துக்கும் இந்த ராஜாங்கத்தில் குறைவில்லை. அப்படியிருக்க, ப்ரமாணம் யாதொன்று மின்றி, ஹிந்துக்கள் பெரும்பாலாருக்கும் மிகுந்த மனவருத்தம் விளைக்கும்படிக்கும் சிறுவர்கள் மனதைக் கலைக்கும்வண்ணம் ஆபாஸயுக்தி பிரயோகங்கள் செய்துவரும் நமது பிராமண சகோதரர்கள் தங்களுக்கு ஞானம் போதுமான அளவு இருந்தாலும், பகவான் கிருஷ்ணனுடைய "ந பு³த்³தி⁴பே⁴த³ம் ஜநயேத்" என்ற வாக்கியத்தை அநுசரித்து நடப்பார்களாக. இந்த தூஷகர்கள் முயற்சி வீணே. ஈசுவரனல் ஏற்படுத்தப்பட்டதை மனுஷ்யன் அழிக்கமுடியாது. ஆனல் வர்ணாசிரமிகள் அனைவரும் மிகவும் சிரத்தையுடன் அநுஷ்டானத்தைக் கைப்பற்றி சிறுவர்களை நல்வழிக்குக் கொண்டுவரப் பிரயத்தனம் செய்யவேண்டியது அவசியம். இந்த விஷயமாய் நீண்டதொரு கண்டனம் நமது சகோதரர் ராவ் சாகேப் எல். ஏ. ரெங்கஸாமி அய்யர் அவர்களால் ஆர்யதர்மத்தில் புரட்டாசி-ஸ்ரீ சஞ்சிகை முதல் பிரசுரமாய் வருகிறது. இந்த விதமான வர்ணாசிரமதூஷணத்தின் பலனை மகர்ஷி மனுவானவர் தன் ஸ்மிருதியில்

"யத்ர த்வேதே வ்யுஸ்வம்ஸா ஜாயந்தே வர்ணதூ³ஷகா: ।
ராஷ்ட்ரிகை: ஸஹ தத்³ராஷ்ட்ரம் க்ஷிப்ரமேவ விநஶ்யதி ॥"

என்று, வர்ணசங்கரத்தாலும் வர்ணதூஷணத்தாலும் ஜனங்களோடு ராஜ்யமே அழிந்துவிடுமென்று சொல்லியிருப்பதை நமது தேசாபிமானிகளான ஹிந்துவர்ணாசிரம தூஷகர்கள் அறிவார்களாக.

டி. வி. சாமிநாதய்யர்.
ப்ரதான காரியதர்சி.

# ஸன்னியாஸமும் கலியும்.

(முன் தொடர்ச்சி)

ப்ரதிக்³ரஹாத் விப்ரோ நித்யம் தேஜோ ஹானிம் ஸமஶ்நுதே ।
ப்ரநஷ்டாயாம் ததோ தஸ்யாம் ப்ராயஶ்சித்தம் ஸமாசரேத் ।
ஸாவித்ரீ ஜபேந ஹோமேந ப்ரநஷ்டாயாம் ததோ த்³விஜ:"

பிராமணன் பிரதிதினமும் தானம் வாங்கியபின் கறக்கப்பட்ட பசுப்போல் போகிறான். பசு மறுபடியும புல் முதலியவைகளால் புஷ்டியடைந்து வருகிறது. அதுபோல் பிராமணனும் ஜபங்களாலும் ஹோமங்களாலும் புஷ்டியடைந்து விடுகிறான் என்றது இதனலேற்பட்டது யாதெனில் பிராமணன் பிரதிக்கிரகத்தினல் கொஞ்சம் குறைவைத்தானடைகின்றான். ஆனல் அதற்கேற்பட்ட பிராயச்சித்தஜபஹோமங்களால் பழையபடி பிரம்மதேஜஸ்ஸைப் பெற்றுவிடுகிறானென்றார். இதனல் பிரதிக்கிரகத்தில் தோஷமில்லையென்று கிரஹஸ்தனுக்கு சாஸ்திரம் கூறிற்று இம்மட்டா.

க்ஷயாதி³ தாஹ்ருதம் த்³ராஹ்யேவி உத்ஸ்ருஷ்டகாரிண: ।
கூடஸ்தா²யை தே ஸத்ப்ரதீ³ர்கா⁴ ப்ரதிக்³ராஹ்ய
ஸ்யாதி³தம் ॥

யயா க்ஷயாவி வா வ்ருத்³தா⁴ நிஜகர்மாத்ருஜநு ஸஹா ।
வித்தமேள விஹ்ரயாஸ்த்ரீக் ஸாயூம் ஹாயமாம் விஶும்.
நவி ॥

கெட்ட செய்கை செய்கிறவனிடமிருந்தும் யாசிக்காமல் கிடைக்கும் திரவியத்தைப் பெற்றுக்கொள்ளலாம். குடும்பத்திற்காக நல்ல சூத்திரனிடமிருந்தும் யாசிக்காமல் பெற்றுக்கொள்ளலாம். எந்த விருத்தி செய்தாலும் தன் கர்மத்தை விட்டுவிடாமல் தாய் தகப்பனையும் பதிவிரதையான மனைவியையும் குழந்தைகளையும் காப்பாற்றலாம் என்றார். இது நியாயம் இது ஏனெனில் கிருகஸ்த தர்மத்திலுள்ளவன் தன்னை ஒருவனை மட்டும் காப்பாற்ற முடியாது. தன்னுடைய தாய் தந்தை மக்கள்களையும் அதிதிகளையும் காப்பாற்றக் கடமைப்பட்டபடியால் அவ்விதம் விதித்தது. ஸன்னியாஸிக்கோ தன் தேகம் எப்போது தொலையப்போகிறதென்று தேகாபிமானமே இல்லாமல் பிராரப்தத்தை மட்டிலுமனுபவித்துக் கொண்டிருக்கவேண்டியவனுதல்பற்றி ஒரு சமயம் சகவாஸ தோஷத்தினாலும் துர்வாஸனு பலத்தினாலுமிழுக்கப்பட்டுக் கெட்ட கன்மத்தைச் செய்யவாரம்பித்துவிடுவானே யென்று சாஸ்திரம் பயந்து அத்தகைய ஆசிரமத்திற்கு வருவோனுக்கும் ஏராளமாய்ப் பயத்தைக் கொடுத்திருப்பது நியாயம் தான். ஆதல்பற்றியே அவனுக்கு ஒருவிதத்திலும் துக்கமில்லையென்றே கூறுகின்றது.

𑌰𑌥𑍍𑌯𑌾𑌯𑌾𑌂 𑌬𑌹𑍁𑌵𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌣𑌿 𑌭𑌿𑌕𑍍𑌷𑌾 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰 𑌲𑌭𑍍𑌯𑌤𑍇 ।
𑌭𑍂𑌮𑌿𑌃 𑌶𑌯𑍍𑌯𑌾𑌸𑍍𑌤𑌿 𑌵𑌿𑌸𑍍𑌤𑍀𑌰𑍍𑌣𑌾 𑌯𑌤𑌯𑌃 𑌕𑍇𑌨 𑌦𑍁𑌃𑌖𑌿𑌤𑌾𑌃 ॥

தெருக்களில் ஏராளமாய் வஸ்திரம் கிடைக்கும். பிக்ஷை எங்கும் பெறலாம், படுக்கைக்கு பூமியோ விசாலமாய் இருக்கிறது. ஆகவே யதிகள் எதற்காக துக்கமடைவார்களென்றது, பிறகு அவர்களுக்கு வேண்டிய விதிகளையும் கூறுகிறது.

𑌰𑌸𑌾𑌯𑌨𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌂 𑌵𑌾𑌦𑌂 𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌷𑌂 𑌕𑍍𑌰𑌯𑌵𑌿𑌕𑍍𑌰𑌯𑍇 ।
𑌵𑌿𑌵𑌿𑌧𑌾𑌨𑌿 𑌚 𑌶𑌿𑌲𑍍𑌪𑌾𑌨𑌿 𑌵𑌰𑍍𑌜𑌯𑍇𑌤𑍍𑌪𑌰𑌦𑌾𑌰𑌵𑌤𑍍 ॥



வைத்தியத்தொழிலையும், வாதம் செய்தலையும், ஜோஸ்யம் சொல்வதையும், வியாபாரத்தொழிலையும், பலவித சில்பங்களையும், பரஸ்திரீயைப்போல் தள்ளிவிடவேண்டும்.

𑌨𑌟𑌾𑌦𑌿𑌪𑍍𑌰𑍇𑌕𑍍𑌷𑌣𑌂 𑌦𑍍𑌯𑍂𑌤𑌂 𑌪𑍍𑌰𑌮𑌦𑌾𑌂 𑌸𑍁𑌹𑍃𑌦𑌂 𑌤𑌥𑌾 ।
𑌭𑌕𑍍𑌷𑍍𑌯𑌂 𑌭𑍋𑌜𑍍𑌯𑌮𑍁𑌦𑌕𑍍𑌯𑌾𑌂 𑌚 𑌷𑌣𑍍𑌣 𑌪𑌶𑍍𑌯𑍇𑌤𑍍𑌕𑌦𑌾𑌚𑌨 ॥

நாட்டியம் முதலானவைகளைப் பார்ப்பதும், சூதாடுவதும், ஸ்திரீ, ஸ்நேகிதர்கள் இவர்களை நேசிப்பதும், பக்ஷணம், நல்ல சாப்பாடு ஆகிய இவைகளைக் கண்ணுற் பார்க்கலாகாது.

𑌏𑌕𑌾𑌹𑌾𑌨𑍍𑌨 𑌪𑌰𑌂 𑌗𑍍𑌰𑌾𑌮𑍇 𑌪𑌤𑍍𑌤𑌨𑍇 𑌤𑍁 𑌦𑌿𑌨𑌪𑌞𑍍𑌚𑌕𑌮𑍍 ।
𑌵𑌰𑍍𑌷𑌾𑌭𑍍𑌯𑍋𑌽𑌨𑍍𑌯𑌤𑍍𑌰 𑌤𑌤𑍍𑌰 𑌸𑍍𑌥𑌾𑌨𑌾𑌸𑌨𑌂 𑌤𑌥𑌾𑌦𑍍𑌰𑍁𑌤𑌮𑍍 ॥

வர்ஷாகாலமென்னும் சாதுர்மாஸ்ய விரதகாலம் தவிர மற்ற காலங்களில் கிராமத்தில் ஒருநாளுக்குமேலும் பட்டணத்தில் ஐந்துநாளுக்குமேலும் வசிக்கலாகாது.

𑌨 𑌸𑌂𑌭𑌾𑌷𑍇𑌤𑍍 𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌯𑌂 𑌕𑌾𑌂𑌚𑌿𑌤𑍍𑌪𑍂𑌰𑍍𑌵𑌦𑍃𑌷𑍍𑌟𑌾𑌂 𑌨 𑌚 𑌸𑍍𑌮𑌰𑍇𑌤𑍍 ।
𑌕𑌥𑌾𑌂 𑌚 𑌵𑌰𑍍𑌜𑌯𑍇𑌤𑍍𑌤𑌾𑌸𑌾𑌂 𑌨 𑌪𑌶𑍍𑌯𑍇𑌲𑍍𑌲𑌿𑌖𑌿𑌤𑌾𑌮𑌪𑌿 ॥

ஒரு ஸ்திரீயுடனும் பேசக்கூடாது. முன்னால் எப்போதும் கண்ட ஸ்திரீயைப் பற்றி மனதில் நினைக்கவும் கூடாது. ஸ்திரீவிஷயமான பேச்சு யாராவது பேசினால் அதைக் கேட்கவுமாகாது. சித்திரத்தில் எழுதப்பட்ட ஸ்திரீயையும் பார்க்கலாகாது. என்று பலகோடி வசனங்களிருக்கின்றன. இவைகளாலெல்லாம் நமக்குக் கிடைத்ததென்னவென்றால் இவ்விதம் செய்தால் அவனது ஆசிரமம் வெகு சிரமமாய் ஆய்விடும் அவனும் அதோகதியடைவான். அவன் ஒருஜன்மத்திலும் கரையேறமாட்டான்.

என்று பிரகாசமாய் ஏற்பட்டது. ஆவ்வாசிரமத்தை அடைவதென்பது பணம் ஸம்பாதிப்பதற்கல்ல. தர்மம் செய்வதற்கல்ல. காமத்தை அடைவதற்கல்ல. மற்று நான்காவது புருஷார்த்தமான மோக்ஷமொன்றையே ஸம்பாதிப்பதற்கே இவ்வாசிரமமேற்பட்டது. ஆதல்பற்றியே இவ்வாசிரமத்திற்குப் பரம மகிமை நேர்ந்தது. ஆதல்பற்றியே காஷாயதண்டமாத்ரேண யதி: பூஜ்யோ ந ஸம்ஶய: காஷாயம் தண்டம் இது இருந்தாலே யதி பூஜிக்கத் தக்கவன். சம்சயமில்லையென்கிறது. காஷாயம் தண்டம் தரித்துக்கொண்டு என்ன அக்கிரமம் செய்தாலும் அவனும் பூஜிக்கத்தக்கவன் தானென்பது அர்த்தமில்லை. ஆகையால் தான் இவ்வாசிரமமத்தவர்கள் முற்காலத்திலுமிக்காலத்திலு மதிகமாய் இருக்கவில்லை. இவ்வாசிரமத்தை அடைவதென்றால் நமது முன்னோர்கள் நடுநடுங்குவார்கள். ஸ்ரீமான் அப்பய்யதீக்ஷிதரவர்கள் கூட இவ்வாசிரமம் அடையும்படி சாந்தமனதில்லையென்று தன்னைச் சொல்லிக்கொண்டு கிருகஸ்தாச்சிரமத்திலிருந்துகொண்டே உயிர் துறந்தாரென்று சொல்வார்கள். அவ்வம்சத்திலவரித்து விளங்கிய மகான் ராஜு சாஸ்திரிகளென்ற பெரியோரும் தமது முதிர்ந்த வயதில் 'ஸன்னியாஸமென்றால் நடுங்குகிறதென்றும், இதற்குத் தகுந்த மனதில்லையென்றும் எங்களது குலகூடஸ்தரான தீக்ஷிதரவர்கள் வழிதான் மேலானதென்றும் சொன்னார்கள்! என்று எனது பரமாசார்யர்கள் சொல்லி யான் கேள்வியுற்றிருக்கிறேன். இப்படி ஆஸ்திகோத்தமர்கள் பயப்பட்டு நடுநடுங்கிய இவ்வாசிரமத்தில் சிவ, சிவ, இக்காலத்திய பிராமணோத்தமர்கள் கற்றவர்களும் சரி மற்றவர்களும் சரி கடனுக்கு பயந்தோ, காசு சம்பாதிக்கவோ, இது தான் மேலான வழியென்று கொண்டு துணிந்திரங்கி மந்திரம்



ஜோதிஷம், வைத்தியம் முதலிய நிஷேதிக்கப்பட்ட வித்தைகளால் ஆஸ்திக வேஷம் பூண்ட லௌகிகஸாதுக்களையும், ஸ்திரீகளையும் மற்றுமுள்ள ஜாதிகளையும வஞ்சித்துப் பலவித அக்கிரமச்செயல்களோடு கண்டவனுக்கெல்லாம் மந்திர உபதேச குருக்களாயும் விளங்கிக்கொண்டு பிரகாசித்து உலகெல்லாம் ஜபித்து வருகிறார்களே இத்தகைய ஸன்னியாஸிகளை எமதாசிரியர் ஸன்யாஸி என்று கூறுகிறதில்லை. மற்றுச் சன்னசி என்ற தமிழ் பதத்தையே உபயோகப்படுத்துவார்கள். இத்தமிழ்ப் பதத்திற்கு ஸம்ஸ்கிருதத்தில் அர்த்தம் செய்வது ஸமயோசிதமாய் இருக்குமென்று சொல்கிறேன். அதாவது அப்பதத்தை ஸம்ஸ்கிருதத்தில் எழுதினால் 'ஸஞாஶீ' என்றாகும். இதன் அர்த்தம் ஸத் ஸாதுக்களை நாசி நாசம் செய்யும் ஸ்வபாவமுள்ளவன். ஆகவே இவர்களைச் சன்னசீ யென்றே யாவருமழைக்கலாம் இத்தகைய சன்னசி எத்தனை சாஸ்திரம் கற்றாலுமென்ன எத்தனை வேதம் தெரிந்துக்கொண்டிருந்தாலுமென்ன பிறருக்கு உபந்யாஸ வாயிலாய் எவ்வளவு கரபோபதேசம் செய்யச் சமர்த்தர்களாயிருந்தாலுமென்ன எந்த ஒரு முக்கியகுணம் வேண்டுமோ அது தான் இல்லையென்றால் அவனால் என்ன பிரயோசனம் ஓர் அரசன் அழகாயும மகாபலமுள்ளவரும் அநேக நூல்களைப் பூரணமாய்க் கற்றவருமான ஓர் பெண்மணியைப்பெற்றாள் அப் பெண்மணி தக்க வயதை அடைந்தவுடன் அவளின் விவாகத்தை உத்தேசித்து தேச தேசங்களிலெல்லாம் ஸமஸ்தகுணங்களாலும் நிறைந்த ராஜகுமாரனைத் தேடிவரும்படி வேவுகாரர்களை அனுப்பினான் அவர்கள் ஆங்காங்கு அலைந்து அரசனின் மனதிற்குப்பிடித்த ராஜகுமாரன் இல்லாதது பற்றித் திரும்பி வந்துவிட்டனர் பிறகு பல நாட்கள் கழிந்தன அரசன் மணமகன் கிடைகாததால் ஆராத் துயரமடைந்தான். பெண்மணியோ நண்ணும் கண்ணீரு

மாய்க் கத்தலானுள் அரசன் மறுபடியும் வேவுகாரனை
அனுப்பினுன் மறுபடியும அவர்கள் ஊர்சுற்றியாய் அலைந்
துவிட்டுப் பழையபடியும் திரும்பிவந்துவிட்டார்கள் கொஞ்
சம் நாட்கழித்தும் ஒருவன் மாத்திரம் கடைசியில் அரசனி
டம் வந்தான் அவன் சொன்னதாவது "மகாராஜாதிராஜ
னே நமது குழந்தைக்குத் தகுந்த மணமகனை யான்கண்டு
வந்தேன் அவனது குணகணங்களைச் சொல்கிறேன் கேளு
ங்கள்" என்ருன். அதைக்கேட்ட அரசனுக்கு துக்கங்
கள் பஞ்சாய்ப்பறந்துபோயின உடனே அந்தப்புரத்திலி
ருக்கும் தன் மனைவியையும் தனது அருமைப் புதல்வியை
யும் தருவித்தான் அந்தவேவுகாரனுக்கு ஆடையாபரணங்
களால் மரியாதைசெய்தான். அப்புருஷனின் குணங்களைச்
சொல்லப்பாவென்ருள் அப்போது அவன் சொல்லவாரம்
பித்தான் வேந்தே அம்மகா புருஷனுக்கு வயது 24 இரு
க்கலாம் அவனது அழகுபோல் நான் இது பரியந்தம் உல
கினிற்கண்டதில்லை அவன் குதிரையில் ஏறியிருக்க நான்
கண்டேன் அவனுக்கென்றே அக்குதிரையும் பிரமனுல்
சிருஷ்டிக்கப்பட்ட பஞ்சகல்யாணிக்குதிரை யென்பேன்
அவனது ஒரு கையில் கத்தியையும் மற்றொரு கையிலணி
ந்திருக்கும் கேடயத்தையும்போல் ஓரிடத்திலும் இதுவ
ரையில் பார்த்ததில்லை அவனது கண் அழகையும் முகவடி
வையும் பராக்கிரமதீரப்பார்வையையும் என்னென்று வர்
ணிப்பேன் அவனது முகமந்தகாசம் ஒன்றே போதும்
நமது புத்திரியைமயக்க இடையில்தெரியும் பல்வரிசையும்
முகத்தில் அழகாய் வளர்ந்து வளைந்து திரிந்து நிற்கும்
மீசையழகும் செப்பத்திறமல்ல. அவனது கருத்த தலை
மயிரு அழகும், அதைமுடித்து அதன்மேல் அணிந்துக்
கொண்டிருக்கும் கிரீடமும் பார்ப்பவர்கள் மனதைக்கவரச்
செய்கின்றதே வேந்தே இன்னும் என்ன சொல்வேன்
ஆனல் ஒன்றுமட்டிலும் குறைவாய் இருக்கிறது அதைச்



சொல்லட்டுமா" என்ருன். அரசனும் மற்றவர்களும்
ஆனந்தக்கடலில் மூழ்கிக்கொண்டு மறுபடியும் வேவுகார
னுக்குத் தன் கழுத்திலிருந்த முத்துமாலையை எடுத்துப்
போட்டு அப்பா ஒருகுணம் குறைவாய் இருந்தால் பாதக
மில்லை. இவ்வளவு குணமுள்ள புருஷனையே யான் கேட்ட
தில்லை. அடி பெண்மணியே உன் கருத்தென்னவென்று
கேட்டான். அவள் என் அருமைத் தகப்பனே இத்த
கைய புருஷன் கிடைத்தால் எனது பாக்கியமே. இத்தகைய
புருஷமணிக்கு என்னகுறைவு இருக்கப்போகிறது. அவ
னது முகலக்ஷணமும் பார்வையுமே அவனது பராக்கிரமத்
தையும் வித்தையின் திறமையையும் காட்டுகின்றது. அப்
படிக் குறைவான குணமும் அல்பமாய்த்தானிருக்கலாம்.
ஆனலும் பாதகமில்லை சேவகா யோசியாமற்சொல் என்ருள்
தைரியமுள்ள வேவுகாரன் சொல்லலுற்ருன்—"யஜமானே,
இவ்விதம் எல்லாக்குணமும் நிறைந்த இம்மகாபுருடனுக்கு
உயிர் இல்லை நான் சித்திரத்தில் இம்மகா புருஷனைக்கண்
டேன். இத்தகைய புருஷன் உயிருடன் இருந்தால் நம்
பெண்மணி புண்யவதிதான்" என்று முடித்தான். "ஆஸ்தி
கர்களே, இதைக்கேட்ட அரசனுக்கும் அவனது மனையா
ளுக்கும் புத்திரிக்கும் அச்சமயம் மனம் எவ்வாறிருக்கு
மென்பதை யான் சொல்லவேண்டுமோ? அதுபோல் இங்
கும் ஸன்னியாஸி சிறுவயதுள்ளவர் அபாரமாய்ப் படித்
தறிந்தவர் பிறருக்கு உபதேசம் செய்யும் விஷயத்தில் ஸாம
ர்த்தியம் செப்பத்திறமன்று. உபன்யாஸமென்று வாய்தி
றந்தாலோ பட்டமரமும் பாலுடன் தழைக்கும். ஆனல்
பண ஆசைமட்டிலும் கொஞ்சம் உண்டு. பெண்ணாசை
யும் அப்படியோ இப்படியோ அநுஷ்டானம். அதெல்லாம்
பெரிய இடம் கவனிக்கக்கூடாது" என்ருல் இவனை முன்
கதையிற்சேர்த்து நிதானமாய் ஒப்பிட்டுப்பாருங்கள் 'அறி

ஞர்களே! இத்தகைய பெரியோர்கள் இக்கலியில் பலர் தோன்றுவாரெனத் தெரிந்துகொண்டே நம் முன்னோர்கள் அவர்களை அவ்வித அக்கிரமம் செய்கிறவன் இன்னகதி யடைவான்" என்று வாயாறத் திட்டிவிட்டு நம்மையும் பார்த்து, தர்மோபதேசம் செய்திருக்கின்றனர். அவையா வன:—ஸுமந்துவென்பவர்

வாநப்ரஸ்தாய யோ தத்யாத் தாம்பூலம் ப்ரஹ்மசாரிணே ।
ஸந்யாஸிநே ஸுவர்ணம் ச த்ரயஸ்தே நரகம் வ்ரஜேத் ॥

"வானப்பிரஸ்தாசிரமமடைந்தவனுக்குப் பக்குவான் னமளிப்பவனும் பிரமசாரிக்குத் தாம்பூலமளிப்பவனும் ஸன்னியாஸிக்குப் பணம் கொடுப்பவனும் நரகத்தையடை வான்" என்று நமக்கு உபதேசம் செய்தார். பிறகு ஸன் னியாஸியைப் பார்த்துப் பரமஹம்ஸோபனிடதம் கூறுவ தாவது

ஸந்ந்யாஸீ ஸ்வர்ணம் நேச்சேத் ந பச்யேத் ந ஸ்ப்ருசேத் ந க்ருஹ்ணீயாத் । யதி ஸ்வர்ணம் பச்யேத் ப்ரஹ்மஹா பவேத் । யதி ஸ்ப்ருசேத் பௌல்கஸோ பவேத் । யதி க்ருஹ்ணீயாத் ஆத்மஹா பவேத் । தஸ்மாத் பிக்ஷுர் ஹிரண்யம் ரஸேந ந த்ருஷ்டம் ந ஸ்ப்ருஷ்டம் ந க்ராஹ்யம் ச ஸர்வே காமா மநோகதா வ்யாவர்த்தந்தே ।

(இன்னும் வரும்)

M. N. சுப்பிரமணிய சாஸ்திரி.

---



# ஹிந்துமதஜாதியும் சீர்திருத்தமும்.

(முன் தொடர்ச்சி)

ஒவ்வொரு தென்னிந்திய ஹிந்துவும் தன்னைப் பிரும ணனென்று பிறர் எண்ணிக்கொள்ளமாட்டார்களா வென்ற ஆசையோடும் உம்முடைய லக்ஷணத்தைப் பார்த்தால் பிராமணன் மாதிரி காணப்படுகிறதே யென்று ஒருவர் சொல்லக்கேட்டால் அதில் ஆநந்தங் கொள்ளுகிற சுபாவத்தோடுமிருப்பதாய் ஸென்ஸஸ் ரிபோர்ட்டில் எழுதப் பட்டிருக்கிறது. ஒவ்வொ ருவரும் ஜாதி அந்தஸ்தில் மேல்நோக்குவாரே ஒழிய கீழ்நோக்கிக் கடைசிக் கீழாக உள்ள டிப்ரெஸ்ட் மனிதன் யாரெனக்கண்டுபிடித்து வரிசைக்கிரமமாய் அவரவர்களைக் கைதூக்கிவிட்டு எல்லாரும் ஸமத்வ மாகச் செய்வது இந்த யுகத்திலில்லை. அதற்கு பிர யத்தினம் பண்ணப்பண்ண சங்கரஜாதிகள் இன்னம் அதிகரித்து எங்கும் அதிர்ப்தி பெருகி நீங்கள் சொன் ன கலகமானது இன்னும் அதிசீக்கிரத்திலேயே வரு மேயொழிய எல்லாரும் சமத்வமாகமாட்டார்கள். வாஸ்தவமான டிப்ரெஸ்ட் வகுப்பைத் தேடி அதில் சமத்வத்தைச் சம்பாதித்துக் கொடுப்பதற்குள், பண த்திலும் உத்தியோகச் சம்பளத்திலும் அழகிலும் பூஸ்திதி மிருசிலும் லக்ஷணமுள்ள மனைவியிலும் புத் தியிலும் சுகத்திலும் தோட்டிமுதல் தொண்டமான் வரையில் எல்லாரும் பாக்கியத்தை நிறவிச் சமத்வம் செய்துகொடுக்கும்படி நாலாபக்கத்திலும் கிளம்பி

ஒருவர்க் கொருவர் மடிபிடித்துக்கொண்டு கலகம் செய்வார்களே. ஓஹோ என்ன சமத்வம் இது? சொப்பனத்திலும் சாயாத ஆசை. 127-வருஷங்களுக்குமுன் பிரான்ஸ் தேசத்தில் ஒரு மஹாபுருஷன் ஜனங்களுக்குள் மெண்டல் ஈக்வாலிடியைப் பரவச்செய்ய ஒரு மசோதாவைக்கொண்டுவந்தானென்று ரேளஸியோஸ் தியரி ஸம்பந்தமாய் சொல்லப்பட்டிருக்கிறது எனக்கு இப்போது ஞாபகத்திற்கு வருகிறது. ஸமத்வமென்பது சிலசில பாவத்துக்களில் மட்டும் சாத்தியப்பட்டாலும் எல்லா விஷயங்களிலும் எப்படி சாத்தியப்படும். மனைவியை நடத்துவதுபோலத் தாயாரையும், விபசாரியை நடத்துவதுபோல் குலஸ்திரீயையும், இளைஞோரை நடத்துவதுபோல் பெரியோரையும், கல்லானை நடத்துவதுபோல் அறிஞோரையும், சத்துருவை நடத்துவதுபோல் மித்துருவையும், நடத்துவது உசிதமாயிருக்குமா. இப்படி இந்தியாவில் நடந்துவரும் ஜாதியேற்பாட்டை மாற்றிவிடலாமாவென்று முண்டிமுண்டி யோஜித்துவிட்டுத் தான் அன்ய தேசத்தாஞகிய V. A. ஸ்மித் தென்ற சரித்திரகர்த்தாவும் ஐரோப்பிய அமேரிக்கர்களும் இன்னும் பல கனவான்களும் இந்தியதேசஜாதி ஏற்பாட்டின் அமைப்பின் சிரேஷ்டம் யோக்கியதைகளை சிலாகித்தும் ஜாதி ஏற்பாடு இந்தியாவிற்கு அவசியமென்றும் அது ஒருநாளும் அழியாதென்றும் அந்த ஜாதியிருப்பதினுல் ஒற்றுமைக்கும் ராஜரீக வியாபாரம முதலிய கிளர்ச்சிகளுக்கும் யாதொரு இடஞ்சலுமில்லையென்றும் வற்புருத்தி அடியில் வருமாறு எழுதியிருக்கிறார்கள். அவைகள் யாவெனில்—

(a) ஜாதி ஏற்பாடானது கல்பகாலந்தொட்டு நீடித்துவரும் ஸ்தாபனமாயிருக்கிறதென்றும் அது கன்யாகுமாரி வரையிலுள்ள இந்தியத் வீபகற்பம் முழுதும் எல்லா எதிரிடைகளையும் லக்ஷ்யம் செய்யாமல் சமாளித்துக்கொண்டு வேரூன்றிப் பாய்ந்திருக்கின்றதென்றும் இந்திய எல்லைக்குள் அப்படி அது நிலைத்திருந்துவருவதற்கு ஏதோ நியாய நிரூபமான யோக்கியதைகள் அதனிடத்தில் இருக்கவேண்டுமென்றும் V. A. ஸ்மித் என்பவர் எழுதியிருக்கிறார்.

(b) ஜாதி ஏற்பாடானது அனேக ஆயிரம் வருஷங்களாக விலையுயர்ந்த அநுபவ ஞானத்தினுடைய தேசாசாரமான கட்டடமென்றும் அதற்குத் தகுந்ததான பதில் கட்டடம் ஒன்று ஏற்பாடு பண்ணியாகிறவரையிலாவது அல்லது அதைவிடக் கெட்டதுதானென்று தெரிந்திருக்கும் வேறொரு ஏற்பாட்டைப் பதிலாய் உதவுமென்று மூடத்தனமாய் நம்பியாவது நாம் அந்த ஜாதி ஏற்பாட்டை அழித்துவிடக்கூடாதென்றும் ஸ்ரீமான் மாதவராவ் அவர்கள் சொல்லியிருக்கிறார்.

(c) அந்த ஜாதி ஏற்பாடானது ஹிந்துமதாசாரஸ்தாபனத்தினுடைய விள்ளப்படாத பரிபூர்ணமான பாகமாய் நிறைந்திருக்கிறதென்றும் ஷை V. A. ஸ்மித் என்பவரே எழுதியிருக்கிறார்.

(d) அந்த ஜாதி ஏற்பாடானது கர்மாவினுடையவும் மறுஜன்மத்தினுடையவும் முக்குணங்களினுடையவும் ஆகிய ஹிந்து தத்வஞான சாஸ்திரக்கொள்கைகளோடு பின்னிக்கொண்டு சேர்ந்திருக்கிறதென்றும் மிஸ்டர் கெட்கார் என்பவர் எழுதியிருக்கிறார்.

(e) ஜாதி ஏற்பாட்டின் முக்கிய லக்ஷணமானது அது இருந்துவரும் உறுதிப்பாடே என்று அனேக சரித்திரக்காரர்களால் கொண்டாடப்பட்டிருக்கின்றது.

(f) ஹிந்துக்களின் மனதானது வழக்கத்தைக் கெட்டியாய் ஒட்டிக்கொண்டிருக்கிறதென்றும் அதினுடைய விதிகளோ இன்னம் அதிகம் கெட்டியாக்கப்பட்ட வழக்கங்களாயிருக்கின்றனவென்றும் அந்த உறுதிப்பாடானது மதத்தினுடையவும் நீதிநெறிக்குறியவும் அனுபவ வித்தைக்குரியவும் வியாபாரத் தொழிலினுடையவும் ஆகிய ஹிந்துமதக் கொள்கைகளை வற்புறுத்திக்கொண்டேயிருக்கும் முக்கிய சக்தியாயிருக்

(g) கின்றதென்றும் அது ஜனசமூக ஒழுங்குக்கு முக்யமான சேவை புரிவிக்கின்றதென்பதாய் மிஸ்டர் அப்பிடு பாய்ஸ் என்பவர் சொல்லியிருக்கிறார்.

(h) ஜாதி ஏற்பாடானது ஆத்மபரித்யாகத்தை அபிவிர்த்தி செய்கிறதென்றும் ஒழுங்குபடுத்தப்பட்டிருக்கிறதென்றும் மானியர் விலியம்ஸ் என்பவர் சொல்லியிருக்கிறார்.

(i) ஜாதி ஏற்பாட்டை அழித்து மூலமாயும் அதினால் வரும் பலவிதமான சங்கரஜாதி சந்தானத்தின் விருத்திக்கு இடம் கொடுப்பதின் மூலமாயும் கிரமக்கிரமமான வளர்ச்சிக்குறிய இயல்பான சட்டத்தைப் பங்கப்படுத்தினால் ஒவ்வொரு குடும்பத்திலும் விரோதம் முற்றி எங்கும் பயங்கரமானவும் ராஜ்யபரஸ்பர வியவகார சம்பந்தமான யுத்தங்கள் உண்டாகி அந்தக் குலமே சொற்பகாலத்தில் பூண்டேயில்லாமல் நிர்மூலமாய்ப் போய்விடுமென்பது நிச்சயமென்பதாய் ஸ்ரீமான் A. கோவிந்தாச்சாரிய ஸ்வாமிகள் எழுதியிருக்கிறார்—

(j) இந்தியாவிற்கு அனர்த்தத்தையுண்டாக்கும் உண்மையான அபாயமானது எங்கே ஜாதிக்கட்டு உடைக்கப்பட்டுப் போய்விடுமோ என்பதனாலேயே யொழிய



அது இருந்தால்தான் க்ஷேமமென்றும் அது உடைபட்டுப்போனால் இந்தியாவிற்கு விநாசம் சம்பவிக்கும் என்றும் ஸர் ஜார்ஜ்பர்ட்வுட் என்பவர் எழுதியிருக்கிறார்.

(k) இந்தியாவில் ஜாதி ஏற்பாடிருப்பதுதான் அனேக க்ஷேமத்திற்குக் காரணமாயிருக்கிறதென்றும் அதை தன்னுடைய 40 வருஷத்திய இந்தியதேச அனுபோகத்தால் கண்டுகொண்டிருப்பதாயும் ஸர் ஜார்ஜ் காம்பல் என்பவர் எழுதியிக்கிறார்.

(l) ஜாதியிருப்பதினால் இந்தியாவின் ராஜநீகத்தினுடையவும் கைத்தொழிலினுடையவும் முன்னேற்றத்திற்கு யாதொரு இடைஞ்சலுமில்லை யென்றும் ஹிந்துக்களானவர்கள் முஸ்லிம் பார்ஸி கிருஸ்துவன் அல்லது பஞ்சமரோடு ராஜீய வியாபாரக்கைத்தொழில் முதலிய விஷயங்களில் தாராளமாய்க் கலக்க ஜாதியிருப்பதினால் தடையில்லை யென்றும் ஹெர்பர்ட் ஸ்பென்ஸர் என்பவர் எழுதியிருக்கிறார்.

(m) ஜாதிக்கொள்கையானது ஹிந்து வாழ்க்கைக்குள் எவ்வளவோ ஆழம் வேரூன்றிப் போயிருக்கிறதென்பதை ஆக்ஷேபிக்க வழியில்லையென்றும் ஆகையால் அதை இனி வேர் களையலானது அசாத்தியமென்றும் அப்படிச்செய்வதும் விரும்பப்படத்தக்கினதாயில்லை என்றும் மிஸ்டர் J. C. மலோனி என்பவர் எழுதியிருக்கிறார்.

(n) ஜாதியை நீக்குதலாவது அல்லது அது தானாய் அழிந்துவிடுமென்பதாவது உதவாக்கரையோஜனையென்றும் அப்படி நடப்பதாயிருந்தாலுங்கூட அது நடக்க அளவில்லாக்காலம் பிடிக்குமென்றும் V. A. ஸ்மித் என்பவர் எழுதியிருக்கிறார்.

(o) ஜாதிஏற்பாடானது இந்தியாவிற்கு ஏற்றதாயிருந்ததால் வெகுதூரம் பூர்வகாலத்தில் தானாய்ப் பெருக்கிக்கொண்டு வந்திருக்கிறதென்றும் அது இன்னும் இப்படியே எண்ணமுடியாத நூற்றாண்டு நூற்றாண்டுகளாக நீடித்து நிற்குமென்றும் அவரே எழுதியிருக்கிறார்.

(p) ஜாதி ஏற்பாட்டின் மனப்போக்கானது மானிடற்குறிய ஸ்வபாவத்தில எவ்வளவு ஆழம் வேரூன்றியிருக்கிறதென்றால் அந்த ஜாதி எண்ணமானது ஒருபோதும் சாகாதென்றும் அது மானிடபிரகிருதியை விட்டு முழுதும் தூரத்திவிடப்படுவதற்கு ஸம்பாவியமேயில்லை யென்றும் ஸர் P. S. சிவஸ்வாமி அய்யர் கெல்லெட் ஹால் உபந்யாசத்தில் சொல்லியிருக்கிறார்.

(q) எப்படி உடலில்லாவிட்டால் உயிரிருக்க இடமில்லையோ உயிரில்லாவிட்டால் உடலிருந்தும் பிரயோஜனமில்லையோ உயிர்போன பிறகுதான் உடலைத் தகனம் செய்தொழிக்கவேண்டுமோ உயிர்போன உடலை ஒருவன் வைத்திருந்தால் நியூஸென்ஸுக்கு முனிஸிபாலிட்டியாராலும் உயிரிருக்கும் உடலை ஒருவன் கொளுத்த முயன்றால் கொலைகேசுக்கு மாஜிஸ்ட்ரேட்டாராலும் அவன் பிராஸக்யூஷன் செய்யப்படுவானோ அப்படிப்போலவே வர்ணாச்ரமஜாதி யில்லாவிட்டால் ஹிந்துமதமிருக்க இடமில்லை. ஹிந்துமதத்தைக் கைவிட்டால் ஜாதியிருந்தும் பிரயோஜனமில்லை. ஒருவன் ஹிந்துமதத்தை விட்டபிறகு ஜாதியை மாத்திரம் வைத்திருந்தால் லோகத்தாராலும் ஹிந்துமதமிருக்கும்போதே ஜாதியை யழிக்கமுயன்றால் ச்ருஷ்டிகர்த்தவராலும் உத்தரவாதத்திற்குள்ளாக்கப்படுவான். ஊர்ந்துகொண்டிருக்கும் ஒருநத்தாங்



கூட்டிலிருந்து அதிலுறையும் பூச்சியைக்கிண்டி யெடுத்தால் பிறகு கூடு முதிராது. முத்தின் கூடு வேணுமானால் அதில் பூச்சி உயிரோடிராது. அதுபோலவே தான் ஜாதியும் ஹிந்துமதமும்.

(r) இதே தாத்பரியத்தைக்கொண்டுதான் V. A. ஸ்மித் என்பவர் ஜாதியில்லாமற்போன பிறகு ஹிந்து ஐக்கிய சமூகமும் ஹிந்துமதமும் உயிரோடிருக்கு மென்றெண்ணுதல் மனதிற்கும் புத்திக்குமெட்டாத அசம்பாவிதமென்றெழுதியிருக்கிறார்:—

(s) அப்படிப்பட்ட ஜாதி ஏற்பாடானது எப்போது அழிக்கப்படச் சாயாததாகிவிட்டதோ அப்போது அதைவைத்துக்கொண்டு கூடியவரையில் அதைநல்ல உபயோகப்படுத்துவதினால் சீர்திருத்தத்திற்கு அலையும் ரிபார்மர்ஸ்கள் தங்கள் மனதைத் திருப்திசெய்துகொண்டு இருக்கவேண்டியதுதான் கதி யென்றும் ஹிந்து மதமாகிய ஆழ்ந்த தண்ணீரானது லகுவில் கலக்கப்படக்கூடியதல்லவென்றும் சீர்திருத்தக்காரர்கள் செய்யும் குழப்பமெல்லாம் அதின் மேற்பரப்பை மாத்திரம் அலைபோலசைக்குமேயொழிய அதின் ஆழத்தைத்துணமேனும் கலக்கக் கையாலாகாதென்றும் மேற்கண்ட V. A. ஸ்மித் என்பவரே எழுதியிருக்கிறார்:—

இப்படிப்போலவே இன்னும் ஐரோப்பியர்களும் அமேரிக்கர்களும் இந்தியதேச ஜாதி ஏற்பாட்டின் சிரேஷ்டத்தையும் உபயோகத்தையும் அதிருப்பதினால் ஒற்றுமைக்கும் கைத்தொழிலிற்கும் ராஜீக வியாபாரத்திற்கும் யாதொரு இடைஞ்சலுமில்லை யென்றும் எழுதியிருக்கிறார்கள்.

மேலேசொன்ன 11 வது பாராவில்கண்ட ஸென்ஸஸ் கணக்கினால் ஹிந்து ஜனங்களில் சீர்திருத்தத்திற்கு சதா

அலையும் பிராமணர்கள் இங்கிலீஷ் படித்திருக்கும் ஒரு லக்ஷம்பேர்களில் சிறிதுபாகம் மாத்திரமே ஆகுமென்று வியக்தமாய்ப்புலப்படும். இங்கிலீஷ்ப் படித்து இதுவரையில் அதினால் மதாபிமானம் குலைந்திருப்பவர்களின் எல்லையானது ஒரு பெரிய சமுத்திரத்தின் விஸ்தீரணத்தில் கரையோரம் கொஞ்சம் விளும்பில் மாத்திரம் கலங்கியிருக்கும் கலக்கம்போல் மட்டும் உபமானம் சொல்லப்படலாமென்று மஹாத்மா காந்தியவர்கள் எழுதியிருக்கிறார். ஆகவே இந்தத் தென்னிந்தியாவிலுள்ள ஜாதியையொழிக்கும் சீர்திருத்தக்காரர்களின் சங்கியையை அரைநாழிகைக்குள் இலங்கை வேந்தன் எண்ணிவிடுவான்.

நான்மேலே சொல்லியிருக்கும் ருஜுக்களைக்கொண்டே (B) என்ற பாராவில் சொல்லப்பட்டிருக்கும் விஷயங்களில் உங்கள் பக்கம் மைனாரிடியும் என் பக்கம் ஜனசமூகத்தின் மெஜாரிடியும் இருப்பதாய்ப்புலப்படும். இன்னும் வேறு பாயிண்டுகள் சொல்லப்பட்டிருந்தால் சொல்லுங்கள் கேட்போம்.

அர்வாச்சி C. இக்காலத்திற்கு ஏற்வையான சிஷ்டாச்சாரம் எப்படியிருக்கவேண்டுமென்றால் ஜனசமூகத்தின் எந்த வகுப்பாருடைய உணர்ச்சிக்கும் ஆயாசம் தருவதாயும் நல்ல அபிவிர்த்திக்குத் தடஸ்தமாயிருக்கிறதாயும் மனிதர்களில் ஒருவனை மற்றொருவனிலிருந்து பிரிக்கச்செய்வதாயும் ஒருவகுப்பிற்கு கொர்வம்தரும் உயர்த்திஸ்தானத்தையபகரிப்பதாயும் மற்றொரு வகுப்பிற்கு ஆயாஸம்தரும் இளப்பஸ்தானத்தை யளிப்பதாயும் உள்ள எல்லா ஏற்பாடுக்களையும் கட்டோடே ஒருத்தரையுங் கேட்காமலே உதரியெறியும்படியானதாயிருக்கவேண்டும். ஒரு குலத்தைச்சேர்ந்த ஜனசமூகங்கள் ஒருத்தருக்கொருத்தர் ஸமத்வமான பதத்திலிருந்துவாழும்படி ஸ்திரப்படுத்தும் காலம் வந்துவிட்



டது. உயர்ந்த ஜாதியோர் உண்டு மீறும்மிச்சத்தைத் தாழ்ந்த ஜாதியாருக்கு இப்போது கூப்பிட்டுக்கொடுத்தபோதிலும்கூட அவர்களுக்கு அது போராது. அவர்கள் ஓரே பந்தியில் மேல்ஜாதியாரோடு ஸமமாய் உட்கார்ந்து போஜனம்செய்வதையும் உலகத்திலுள்ள எல்லா ஐசுவரியபோகங்களையும் ஸமத்வமாய் பங்குபோட்டுக்கொள்வதையும் வாழ்க்கையினுடைய நற்சமயங்களை ஸமமாய் அனுபவிப்பதையுமல்லவோ அவர்கள் இப்போது வேண்டுகின்றார்கள். கடவுளுடைய பார்வையில் உலகத்திலுள்ள எல்லா மனிதர்களும் ஸமமல்லவா ? என்று சொல்லப்பட்டது.

தர்மி:—ஜாதி ஏற்பாடிருப்பதனால் ஜன ஸமூக அபிவிர்த்திக்கு யாதொரு தடஸ்தமுமில்லையென்றும் எல்லா ஜாதியும் சேர்ந்து ஸகபந்தி போஜனம் செய்வதும் உலக ஐசுவரியபோகங்களை ஸமத்வமாய் விரவிப்பங்குபோட்டுக்கொள்வதும் சாயாத காரியமென்று முனனமேயே சொல்லியிருக்கிறேன். கடவுளைப்போன்ற தாய்தகப்பனுக்கு தான் பெற்ற பிள்ளைகளெல்லாம் ஸமமேயானாலும் பிள்ளைகளாகிய சகோதரர்கள் வேற்றுமைகளில்லாமல் ஸமத்வமாயிருந்து வருகிறார்களா? உலகத்தில் எல்லாம ஸாம்யம் என்பதும் எல்லா மனிதர்களும் ஸமமேயென்பதும் உண்மையாயிருக்கும் பக்ஷத்தில் உயர்வு தாழ்வு, பெரிது சிறிது, நல்லது கெட்டது, ஸாம்யம் வித்தியாசம் ராஜா பிரஜை, எஜமானன் பிருத்தியன், குரு சிஷ்யன், பெரியோர் சிறியோர் முதலியவைபோன்ற சொற்கள் அகராதியில் எழுதப்பட்டிருக்கவே நியாயமில்லை. இப்போதிருக்கும் ஜாதிஏற்பாட்டினால் மேலுக்கு வேற்றுமைகளிருப்பதுபோல காணப்பட்டாலும் மனதில் எல்லாரும்

ஒற்றுமையோடிருக்கலாம். நீங்கள் சொல்லும் சிஷ்டாசாரமானது ஒற்றுமை வந்ததுபோல் மேலுக்கு மாத்திரம் நிர்ப்பந்தத்தினால் காணப்படுத்துமே ஒழிய மனதில் ஒருவர்க்கொருவர் சேராமல் அதிக பொறாமையையும் த்வேஷத்தையும் கிளப்பிவிட்டுக் கலகமுண்டாக்க ஏதுவாயிருக்கின்றது. இதைப்பற்றி முன்னமேயே (h) என்ற பாரவில் பதில் சொல்லியிருக்கிறேன். ஜனஸமூக சேவைபுரிவதாய்ப் பேர்வைத்துக்கொண்டு ஜாதி ஏற்பாடு அதற்குத் தடஸ்தமாயிருப்பதாயும் நினைத்துக்கொண்டு அந்த ஜாதியை அடியோடே அழித்துவிட முயற்சிசெய்யும்சீர்திருத்தக்காரர்களை சிலாகிக்கும் தங்களை நானும் சில கேள்விகள் கேட்கிறேன்: இத்தேசத்தில் நவீன நாகரீகம் நுழைந்து வேலைசெய்ய அடியிற்கண்ட துர்க்குணங்கள் எல்லா ஜாதியாரிலும் அதிகம் பரவியிருக்கின்றனவென்பதை நாம் நேரில்காண்கிறோம் அவைகளில்சில என்னவெனில்

ஆசை பேராசை அவிவை மாச்சரியம்
பேதபுத்தி பகை பெருமை இறுமாப்பு
செருக்க கங்காரம் சுய நலவிருப்பம்
சொந்த ஆதீனவிர்த்தீ தாபிமானம்
கெர்வம் பொறாமையுடன் ஈர்ஷையெரிச்சல்
விஷய இந்திரியசுகம் வர்ணதர்மங்களை
அனுஷ்டானமின்றியே அலக்ஷியம் செய்தலும்
ஒருவரை ஒருவர் வெறுத்துத் தன் பாட்டையே
மேலெனக்கொள்ளல் ஆம் துற்குணம் இருபதும்

ஜாதி ஏற்பாட்டை ஒழித்துவிடுவதினால் நீங்கிப் போய்விடுமென்றும் ஜாதி ஏற்பாடே துற்குணங்களுக்குக் காரணமென்றும் மனப்பூர்வமாய் நீங்



கள் எண்ணியிருக்கிறீர்களா? இந்தியாவைப் போல் ஜாதி ஏற்பாடில்லாத ஐரோப்பா அமேரிக்கா முதலிய தேசங்களில் மேற்கொண்ட துற்குணங்கள் இல்லாமலிருக்கின்றனவா? அடியிற்கண்ட நற்குணங்கள் எல்லா ஜாதியாரிடத்திலும் இப்போது வெகுசாய் குறைந்துகொண்டு வருகின்றன. அவைகள் என்னவெனில்—

பயபக்திநேர்மை வணக்கம் விவேகம்
தர்மசிந்தை தான சமதமமுதாரம்
தர்மபரிபாலனம் நியாயாதிபதி குணம்
பிற உயிர்கொல்லாமை ஜீவகாருண்யம்
ஆபத்துக்காலத்தில் தவறாது துணைசெயல்
ஜீவராசிகட் கடைக்கலம் சுத்தி
சமயானுஷ்டானப் பிரவர்த்தி செந்தண்மை
சமய ஆசாரணைகளை நடத்துகிறதும்
இந்திரியமடக்கல் உபாஸனை பொறுமை
நல்லொழுக்கம் தபஸு சாஸ்திரஞானம்
மனவாக்கு காயமில் மாசு இல்லாமை
சாந்தி அத்யயனமும் ஞானவித்பத்தும்
வேதத்தில் நம்பிக்கை பொருளாசையற்றலும்
அதிகாரம் பெறவே விருப்பமில்லாமையும்
பொதுஜனக்ஷேமமொடு முப்பத்திமுன்றதே

என்று சொல்லப்பட்ட நற்குணங்களெல்லாம் ஜாதி ஏற்பாட்டை அழித்துவிடுவதினால் ஜனங்களுக்கு வந்துவிடுமென்று மனப்பூர்வமாய் நீங்கள் எண்ணியிருக்கிறீர்களா? ஜாதி ஏற்பாடானது இதுவரையில் வெகுகாலமாய் மேற்கண்ட நற்குணங்களை வரவொட்டாமல் தடுத்துக்கொண்டிருக்கின்றதா? ஜாதி ஏற்பாடில்லாத இங்கிலாண்டு அமேரிக்கா ருஷியா முதலிய

தேசங்களில் மேற்கண்ட நற்குணங்கள் குடிகொண்டிருக்கின்றனவா? மேலும் எந்த ஜனங்களுடைய உணர்ச்சிக்கும் ஆயாசம் தராத ஏற்பாட்டைக் கைபிடிக்கச் சிபார்சு செய்யும் நீங்கள் புது லாவினாலாவது அதிகாரிகளின் நிற்பந்தத்தினாலாவது ஜாதியை அழித்து வர்ணஸங்கரம் செய்துவிடும்பக்ஷத்தில் ஹிந்து மதாசாரத்தில் நம்பிக்கை வைத்திருக்கும் எத்தனை லக்ஷலக்ஷம் பேர்களுடைய மன உணர்ச்சி ஆயாசத்துன்பத்திற் குள்ளாகுமென்று நீங்கள் யோஜித்துப் பார்த்தீர்களா? இதுவரையில் வெகுகாலமாய் இறந்துபோனவர்கள் கோடிகோடி. இப்போதிருப்பவர்கள் பலகோடி. இனி பிறக்கப் போகிறவர்கள் கோடிகோடி. இத்தனை கோடி ஜனங்கள் ஒருவர் முகச்சாயல் மாதிரி ஒருவர் முகச்சாயலில்லாமலும் ஒருவர் குணம் மாதிரி ஒருவர் குணமில்லாமலும் ஒருவர் குறல் மாதிரி ஒருவர் குறலில்லாமலும் எல்லாச் சிறுவர்களுக்கும் ஒரேமாதிரியாகப் பொருளும் கல்விப் பயிற்சியும் அளித்தபோதிலும் அவர்கள் பணம் சேர்ப்பதிலும் கல்வியிற்றேருவதிலும் வேறுவேறு விதங்களாய் முடிவில் மாறிப்போவது முதலிய சம்பவங்கள் பகவானுடைய அமைப்பேயாகுமென்று கர்மாவும் முன்ஜன்ம மறுஜன்மங்களும் உண்டென்பதை நம்பியிருக்கும் ஹிந்துக்களுக்குத் தெரிந்தேயிருக்கிறது. மனுஷ்யர்களில் ஒருவருக்கும் மற்றொருவருக்கும் ஜனனகாலத்திலேயே ஏற்பட்டிருப்பதும் லெகுவில் மாற்ற சாத்தியப்படாததுமான வேற்றுமை வித்யாஸங்கள் அனேகம் இருக்கின்றன. அவைகள் கர்மபலத்தை ஓட்டியே நடைபெற்று வருகின்றன. அந்த வேற்றுமைகளில் சில யாவெனில்—



ஆண் பெண்ணில் ஒன்றதோ பேடியோ மதனையும்
புஷ்டியோ சோனியோ பூமியில் தன்னிறம்
சிகப்போ கருப்போ நல் அழகன் விரூபனோ
அங்கமும் சரியோ தன்னங்கமில் ஹீனனோ
நோயிலானோ இலேல் வியாதியிலுழல்வனோ
தாய் தந்தையர் ஸ்திதி அந்தஸ்து யோக்கியதை
குணம் தனம் உள்ளரோ இல்லையோ தன்னுணவு
கஞ்சியோ கூழதோ பால்பழஞ் சீனியோ
பாயிலாத் தரையோ படுக்கவே மெத்தையோ
குடிசையோ மாடியோ மச்சரண்மனையதோ
பாபரோ தனிகனோ படித்திடும் விஷயமில்
புத்தி தீக்ஷண்யனோ இல்லையேல் மூடனோ
பரிக்ஷையில் பியாஸோ பலதடவை பெயிலோ
ஜீவனம் கூலியோ உத்தியோகமோ அதையும்
பரதேசியோ இலேல் டணக்குவையலாளனோ
சகோதரி சகோதரன் உள்ளனோ இல்லையோ
நற்குணச் சாந்தனோ துற்குண முரடனோ
இல்லாளும் நல்லளோ இணங்காத மூளியோ
விவேகியோ மதியிலா அவிவிவேகியோ அவன்
ஆயுளில் அற்பனோ ஆண்டு நூறுள்ளனோ
சாஸ்திரக் கல்வியில் ஞானியோ சூன்யனோ
ஆஸ்திகச் சீலனோ நாஸ்திகக் கோலனோ
சுத்தனோ அசுத்தனோ சுகதுக்க ஜீவியோ
புத்திரபாக்யனோ பிறவியில் மலடனோ
தயாளுவோ கிருபணனோ சாதுவோ சூதனோ
நாணயம் போக்கிரி நடத்தை எவ்வண்ணமோ
ஸத்யவாக்குடையனோ சதிசெய்யும் சூதனோ—

இப்படி அநேக வேற்றுமைகளுள்ள பதவிகளில் ஒருவனுக்கு எந்தப் பதவி ஜனனகாலரீதியாய்க் கிடைத்

திருந்தாலும் அதையேற்றுக்கொண்டு அவன் சகித்து வருகிறானே ஒழிய அது தனக்குப் பிடிக்கவில்லையென்று சீர்திருத்தக்காரரிடம் அப்பீல் செய்து அவன் மாற்றிக்கொள்ளச் சரிப்படவில்லை. அவன் இத்தனை விஷயங்களில் தனக்குக் கிடைத்திருக்கும் பதவி பாக்கிய வித்தியாஸங்களை வாய்பேசாமல் சகித்துக்கொண்டு வாழ்ந்துவர தான் ஜனனகாலத்தில் எந்த மதம் எந்த ஜாதியில் பிறந்திருப்பதாய்க் காண்கிறானோ அந்தப் பதவியை மாத்திரம் அவனுக்குச் சகிக்க சம்மதமில்லாமலிருப்பதுபோல் நீங்கள் எண்ணிக்கொண்டு ஏன் அனாவச்யமாயும் நிஷ்பிரயோஜனமாயும் கஷ்டப்படுகிறீர்கள்? மதம் என்பதும் ஸ்வதர்மம் என்பதும் மனுஷ்யனால் விலக்கப்படக்கூடாதென்பதாயும் அதுவே குலத்திற்கு ஜீவனென்றும் அதைக் கைவிட்டால் மரணம் சம்பவிக்குமென்றும் நாசமே பலிதம் என்றும் ஸ்வாமி விவேகானந்தர் இந்தியர்களைப் பார்த்துச் சொல்லியிருக்கிறார். ஜாதி ஏற்பாட்டை அழித்துவிடுவதினால் ஒவ்வொருவருடைய பாக்கியத்தின் வேற்றுமைகள் மாறி ஸமத்வம் வந்துவிடுமென்று நீங்கள் மனதார நினைத்திருக்கிறீர்களா? ருஷ்யா இங்கிலாந்து அமேரிக்கா முதலிய மேல்நாடுகளில் ஜாதி ஏற்பாடில்லாதிருந்தும் அங்குள்ளவர்கள் எல்லா தேசத்தாருக்கும் ஸமத்வத்தைக் காட்டியும் அல்லது தங்களுக்குள் சமத்வத்தையடைந்தும் வாழ்ந்துவருகிறார்களா? அவர்கள் தங்கள் இனத்தாராகிய ஈஸ்டிண்டியர்களையும் தங்கள் தேசத்தாராகிய வேறு வர்ணத்தாரையும் தங்களுக்கு சமத்வமாய்ச் சேர்த்துக்கொண்டு நடத்திவருகிறார்களா? நமக்கு எல்லா ஸ்திரீகளும் சமத்வந்தானே என்று சொல்லி பெண்டாட்டியின் மேலுள்ள காமசம்பந்த



மான பிரியத்தைத் தாயினிடத்திலாவது குமாரியினிடத்திலாவது அல்லது சகோதரியினிடத்திலாவது காட்டச் சரிப்படுமோ? ஒருவிஷயத்தில் ஒருவனுக்கு சமத்வத்தைக் கொடுத்தாலும் அவனுக்கு மற்றொரு பக்கத்தில் அசிங்கையும் ஆசையும் வேற்றுமையும் கிளம்பிக் கொண்டேயிருக்குமென்பது சிருஷ்டியின் இயல்பே ஆகும். அதைத்தடுப்பது நடவாத காரியம். ஒரு மூடாத கலசத்தில் தூரத்திலுள்ள தப்பனைகளை ஓடி ஓடி ஒன்றொன்றாய் பிடித்து உயிருடன் விட்டுக் கொண்டிருந்தால் அந்தக் கலயம் நிரம்பிப் போகுமா? வேற்றுமை என்பது பகவானால் ஏற்படுத்தப்பட்ட அமைப்பு. கர்மபலத்தின் கொள்கையும் அதுவேயாகும். லண்டன் கிளப்பில் ஸ்வாமி விவேகானந்தர் கொடுத்த லெச்சரில் என்ன சொல்லியிருக்கிறாரென்றால் வெரயிடி அதாவது வேற்றுமையானது மனித வாழ்க்கைக்கு ரொம்பவும் ஸத்தாகும், என்றும் அதினால் வரக்கூடிய ஸ்டிங் அதாவது சேஷ்டையை மட்டும் எடுத்துவிடும்பக்ஷத்தில் அந்த வேற்றுமையைச் சாச்வதமாகவே நாம் வைத்துக்கொள்ளலாம் என்றும் யூனிட்டி அதாவது ஒற்றுமையானது வேற்றுமையிலேயும் வேற்றுமை மூலமாயுமே அடையப்படவேண்டியிருப்பதால் ஒற்றுமை எவ்வளவு மனுஷ்யர்களுக்கு முக்கியமோ அவ்வளவு வேற்றுமையும் முக்கியம் வேண்டியதுதான் என்றும் எல்லா விஷயங்களிலும் ஸமத்வத்தை அமைப்பது அசாத்தியமென்றும் சிலர் பலமாயும் சிலர் பலஹீனமாயும் சிலர் ஏழையாயும் சிலர் பணக்காரராயும் சிலர் புத்திசாலியாயும் சிலர் மந்தபுத்தியுள்ளவராயும் இப்படியெல்லாம் உலகத்தில் வேற்றுமைகள் இருக்கத்தான்

செய்யுமென்றும் ஜாதி வர்ணத்தினுல் நேரக்கூடிய செஷ்டையை எடுத்தெரிவதற்காகவே ஆச்ரமதர்மம் ஏற்பட்டிருக்கிறது என்றும் ஆதலால் வேற்றுமைகளை அழிக்காமலே ஒற்றுமையை நாம் சித்தியாக்கிக் கொள்ளலாமென்றும் வெரயிடி என்பது உலகத்தில் சாச்வதமாயிருக்கவேண்டுமென்றும் ஏனென்றால் மனிதவாழ்க்கைக்கு அதுதான் ஸாரமென்றும் வேற்றுமை வித்தியாஸங்களை ஒழிப்பதானது சாயாத காரியமென்றும் அப்படி ஒழிப்பது என்பதற்கர்த்தம் சாவு தானென்றும் ஸ்வாமி விவேகானந்தர் சொல்லியிருக்கிறார்.— உலகத்தில் ஒவ்வாமை அல்லது வேற்றுமைகளும் ஸமமின்மை அல்லது வித்யாஸங்களும் பிரபஞ்சத்தினுடைய காரியங்களென்றும் அந்த அடிப்படையின்பேரில்தான் ஜாதி ஏற்பாடு நிற்கிறதென்றும் மானிடற்குறிய அல்லது உலக சுபாவத்தின் காரியங்களால் நிலைக்கச் செய்யப்பட்டிருக்கிற அந்த வேற்றுமைகளை நாம் அலக்ஷியம் செய்யக்கூடாதென்றும் உலகசிருஷ்டியில் அதிகமாக வேற்றுமைகளும் ஸமமின்மைகளும் நிதரிசனமாய்க் காணப்படுகின்றனவென்றும், மனிதர்களின் மனதிற்குறியவும் நீதிநெறிக்குரியவும் சரீரசம்பந்தமுமான குணங்களில் அயத்னஸிருதமான வேற்றுமைகள் விசேஷமாய்க் காணப்படுகின்றனவென்றும், அந்த வேற்றுமை வித்யாசங்களைக் கவனித்து அறியாமல் நாம் கண் மூடிக்கொண்டு பேசுவது புத்திஹீனமென்றும் ஸர் P. S. சிவஸ்வாமி அய்யரவர்கள் கெல்லெட் ஹாலில் சொல்லியிருக்கிறார்.

(இன்னும் வரும்)

L. A. ரேங்கசாமி அய்யர்.

